# திருப்புகழமிர்தம்

| மலர் 17. | நந்தன . ஆடி | இதழ் 4 |
|---|---|---|



| வருட சந்தா ரூ. 2-0-0 | "காதலுட னேதுமடி யார்களுட னுடியொரு கால்முருக வேளெனவும் அருள்தாராய்" | தனிப்பிரதி விலை. 0-3-0 |
|---|---|---|

ஆசிரியர்: கிருபானந்தவாரி

சிந்தாதிரிப்பேட்டை ....... சென்னை

ஒளிநெறிமன்றச்சார்பில் நடந்த சொற்பொழிவுகள்
சொற்பொழிவாளர்: திரு. திருமாமணி சிவம்.

| நாள் | | ஊர் | பேசிய பொருள் |
|---|---|---|---|
| நந்தன வைகாசி | | | |
| 1. | 11உ | அய்யம்பேட்டை | 'கைத்தலநிறைகனி' |
| 2. | 12உ | ,, | 'முத்தைத்தரு' |
| நந்தன ஆனி | | | |
| 3. | 9உ | கீரல்வாடி | 'கைத்தலநிறைகனி' |
| 4. | 10உ | ,, | 'முத்தைத்தரு' |
| 5. | 11உ | எண்டத்தூர் | 'கைகேசிமனமும் இராமர் வனமும்' |
| 6. | 12உ | அகத்திப்பட்டு | 'சிவோபதேசம்' |
| 7. | 13உ | அருங்குணம் | 'காரைக்காலம்மையார்' |
| 8. | 19உ | குடியேற்றம் | 'நந்தனார் முற்பகுதி' |
| 9. | 22உ | சென்னை வேதாந்தசங்கம் | 'நடராஜ தத்துவம்' |
| 10. | 23உ | கௌரங்க பக்தஜனசபை சென்னை | 'கைகேசிமனமும் இராமர் வனமும்' |

---

ஒளிநெறிமன்றச் சார்பில் நடந்த சொற்பொழிவுகள்
சொற்பொழிவாளர்: திரு சிவக்கிழார் திருநாவுக்கரசனார்.

| நாள் | | ஊர் | பேசிய பொருள் |
|---|---|---|---|
| நந்தன வைகாசி | | | |
| 1. | 3உ | மண்ணச்சநல்லூர் | 'நன்னெறிகாத்த நாயனார்' |
| 2. | 4உ | ,, | 'காரைக்காலம்மையார்' |
| 3. | 12உ | ஆறுமுகனேரி | 'காரைக்காலம்மையார்' |
| 4. | 13உ | ,, | 'வள்ளுவர் வழி' |
| 5. | 14உ | ,, | 'முருகன் பெருமை' |
| 6. | 17உ | சேலம் | 'ராமலிங்கர் உள்ளம்' |
| 7. | 18உ | ,, | 'சமயவாழ்வு' |
| 8. | 19உ | ,, | 'ராமலிங்கர் உள்ளம்' |
| 9. | 20உ | தர்மபுரி | 'வள்ளுவர் இன்பம்' |
| 10. | 21உ | ,, | 'காரைக்காலம்மையார்' |
| 11. | 22உ | குமாரசாமிபேட்டை | 'குமரகுருபரர்' |
| 12. | 23உ | ,, | 'சண்டேசுரர்' |
| 13. | 24உ | பேராம்பட்டு | 'நன்னெறிகாத்த நாதனார்' |
| 14. | 25உ | ,, | 'காரைக்காலம்மையார்' |
| 15. | 26 | திருப்பத்தூர் | 'பிட்டுக்கு மண்சுமந்தது' |
| 16. | 27உ | ,, | 'சண்டேசுரர்' |
| நந்தன ஆனி | | | |
| 17. | 2உ | திருவநந்தபுரம் | 'ஒளிநெறி' |
| 18. | 3உ | ,, | 'குமரகுருபரர்' |
| 19. | 4உ | ,, | 'முருகன் அவதாரம்' |
| 20. | 5உ | ,, | 'முருகன் கருணை' |
| 21. | 6உ | ,, | 'வள்ளுவர் வழி' |
| 22. | 7உ | ,, | 'புலமையும், புலவர்களும்' |
| 23. | 8உ | ,, | 'காரைக்காலம்மையார்' |
| 24. | 9உ | ,, | 'பிட்டுகந்த வள்ளல்' |


ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் முன்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 17 | நந்தன ஆண்டு ஆடித் திங்கள் ஜூலை-1952 | இதழ் 4


## திருப்புகழ்

### பொது

புகரில் சேவல தந்துர சங்க்ரம
  நிருதர் கோபக்ர வுஞ்சநெ டுங்கிரி
  பொருத சேவக குன்றவர் பெண்கொடி
        மணவாள-
புனித பூசுர ருஞ்சுர ரும்பணி
  புயச பூதர என்றிரு கண்புனல்
  பொழிய மீமிசை யன்புது ளும்பிய   மனதுகி;
அகில பூதவு டம்புமு டம்பினில்
  மருவு மாருயி ருங்கர ணங்களு
  மவிழ யானுமி ழந்த இடந்தனி   லுணர்வாலே-
அகில வாதிக ளுஞ்சம யங்களும்
  அடைய ஆமென அன்றென நின்றதை
  யறிவி லேனறி யும்படி யின்றருள்   புரிவாயே;
மகர கேதன முந்திகழ் செந்தமிழ்
  மலய மாருத மும்பல வெம்பரி
  மளசி லீமுக மும்பல மஞ்சரி   வெறியாடும்-
மதுக ராரம்வி குஞ்சணி யுங்கர
  மதுர கார்முக மும்பொர வந்தெழு
  மதன ராஜனை வெந்துவி ழும்படி   முனிபால;

முகிழ்வி லோசன ரஞ்சிறு திங்களு
முதுப கீரதி யும்புனை யுஞ்சடை
முடியர் வேதமு நின்றும ணங்கமழ் அபிராமி-
முகர நூபுர பங்கய சங்கரி
கிரிகு மாரித்ரி யம்பகி தந்தருள்
முருக னேசுர குஞ்சரி ரஞ்சித பெருமாளே.

## பதவுரை

மகர கேதனமும் - மகரமீனக் கொடியும், திகழ் செம் தமிழ் மலய மாருதமும் - இனிமை திகழ்கின்ற செம்மையான தமிழ் முழங்கும் சந்தன மலையாகிய பொதிய மலையில் பிறந்த தென்றல் காற்றும், பல வெம் பரிமள சிலீமுகமும் - நானாவிதமான ஆசையை யூட்டுவதாகிய மண முள்ள மலர்க் கணைகளும், பல மஞ்சரி வெறி ஆடும் - பலவித பூங் கொத்துகளில் உள்ள மணத்தில் விளையாடும், மதுகர ஆர விகுஞ்ச அணியும் - வண்டுகளின் வரிசையாகிய நாணுடன் மேலான மலர்க் கொத்துக்களின் வரிசையும், கர மதுர கார்முகமும் - கரத்தில் ஏந்திய இனிய கரும்பு வில்லுங் கொண்டு, பொர வந்து எழு மதனராஜனை - போர் செய்ய எழுந்து வந்த மன்மதனை, வெந்து விழும்படி முனி - வெந்து சாம்பலாக விழும்படிச் சினந்த, பால முகிழ் விலோசனர் - குவிந்திருக்கின்ற நெற்றிக் கண்ணரும், அம் சிறு திங்களும் - அழகிய இளம்பிறைச் சந்திரனையும், முதுபகிரதியும் புனையும் - பழமையான கங்கா நதியையும் சூடியிருக்கின்ற, சடைமுடியர் - சடா மகுடமுடையவருமாகிய சிவ பெருமானும், வேதமும் நின்று மணங்கமழ் அபிராமி -அறுபத்து நான்கு கலைகளுடன் வேதமும் நின்றுதொழ ஞான மணம் வீசுகின்ற அபிராமி யம்மையையும், முகர நூபுர பங்கய சங்கரி - சங்குகளாற் செய்த நூபுர மணிந்த திருவடித் தாமரையுடன் கூடியவரும் சுகத்தைச் செய்பவரும், கிரி குமாரி - மலையரையன் மகளாரும், த்ரியம்பகி - மூன்று கண்களை யுடையவரும் ஆகிய உமையம்மையாரும், தந்து அருள் - பெற்றருளிய, முருகனே - முருகக் கடவுளே! சுர குஞ்சரி ரஞ்சித - தேவயானை யம்மையார் விரும்புகின்ற, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! புகரில் சேவல - குற்றமில்லாத சேவற் கொடியுடையவரே! தந்துர - உயர்ந்த பற்களையுடையவர்களும், சங்க்ரம-போரை விரும்புகின்றவர் களுமாகிய, நிருதர்கோப - அசுரர்கள்மீது கோபிக்கின்றவரே! க்ரவுஞ்ச நெடுங்கிரி பொருத சேவக - நீண்ட மலையாகிய கிரவுஞ்சத்தைப் பிளந்த வீர மூர்த்தியே! குன்றவர் பெண் கொடி மணவாள - வேடர் குலக் கொழுந்தாகிய வள்ளியம்மையாரது கணவரே! புனித பூசுரரும் சுரரும் பணி - தூய்மையான அந்தணர்களும் தேவர்களும் வணங்குகின்ற, புயச பூதர என்று - மலைகள்போன்ற தோள்களையுடையவரே என்று துதித்து, இருகண்புனல் பொழிய - இரண்டு கண்களிலிருந்து ஆனந்தக்



கண்ணீர் சொரியவும், மீ மிசை அன்பு ததும்பிய மனனாகி - மென் மேலும் அன்பு பெருகிய மனத்தையுடையவனாகி, அகில பூத உடம்பும் - எல்லாப் பூதங்களும் சேர்ந்த உடம்பும், உடம்பினில் மருவும் அரு உயிரும் - உடம்பினில் பொருந்தியுள்ள அரிய உயிரும், கரணங்களும் - மனம் முதலிய கரணங்களும், அவிழ - கட்டு நீங்கவும், யானும் இழந்த இடந்தனில் - யான் என்ற பசு போதமும் விலகிய இடந்தனில், உணர்வாலே - சிவ போதத்தினாலே, அகிலவாதிகளும் - தேகாத்மவாதி, கரணாத்மவாதி, ஏகாத்மவாதி, கணபங்கவாதி முதலிய மாறுபட்ட எல்லாவாதிகளும், சமயங்களும்-சமய ஞானமும், அடைய - ஒதுங்கி ஒளிய, ஆம் என அன்று என நின்றதை - ஆம் என்றும் அன்று என்றும் நின்ற உண்மைப் பொருளை, அறிவிலேன் அறியும்படி இன்று அருள் புரிவாயே - அறிவில்லாத சிறியேன் அறிந்து உய்யும்படி இன்று உபதேசித்து அருள்புரிவீர்.

## பொழிப்புரை

மகர மீனக் கொடியுடனும், செம்மையான தமிழ் விளங்குகின்ற சந்தன மரங்களுடன் கூடிய பொதிய மலையிலிருந்து வருகின்ற தென்றல் காற்றுடனும், பலப்பல ஆசையை யூட்டுகின்ற மணமிக்க மலர்க்கணைகளுடனும், பல மலர்க் கொத்துகளில் உள்ள நறுமணத்தில் விளையாடுகின்ற வண்டுகளின் வரிசையாலாகிய நாணுடனும், மேலான பூங்கொத்துக்களுடனும், கரத்தில் ஏந்திய இனிய கரும்பு வில்லுடனும் எழுந்து போர் செய்யவந்த மன்மதனை எரிந்துவிழும்படி சினந்த சிறிது குவிந்த வண்ணமாக இருக்கும் நெற்றிக் கண்ணரும், அழகிய இளந் திங்களையும் பழமையான கங்காநதியையும் சூடியுள்ள சடை முடியை யுடையவருமாகிய சிவபெருமானும், சகல கலைகளுடன் வேதமும் நின்று துதிக்க ஞானவாசனை வீசுகின்ற அபிராமியும், சங்கினாற் செய்த நூபுரம் அணிந்த திருவடிக் கமலங்களை யுடையவரும், உயிர்களுக்குச் சுகத்தைச் செய்பவரும், மலையரையன் மகளாரும், மூன்று கண்களை யுடையவரும் ஆகிய உமாதேவியாரும் பெற்றருளிய முருகக் கடவுளே! தெய்வயானை விரும்புகின்ற பெருமிதம் உடையவரே! குற்றமில்லாத சேவற்கொடியை யுடையவரே! தூக்கிய பல்வரிசை யுடையவர்களும் போரில் விருப்பமுள்ளவர்களுமாகிய அரக்கர்கள் மீது கோபிக்கின்றவரே! நீண்ட கிரவுஞ்ச மலையைப் பிளந்த வீர மூர்த்தியே! வேடர் குலத்தில் வந்த வள்ளியம்மை யாருடைய கணவரே! தூய வேதியர்களும் தேவர்களும் தொழுகின்ற மலைபோன்ற தோள்களையுடையவரே! என்று துதித்து, இருகண்களிலும் (அருவிபோல்) கண்ணீர் பொழியவும், மென்மேலும் அன்பு பெருகிய மனத்தையுடையவனாகி, மண்முதலிய பூதங்களால் ஆகிய இவ்வுடம்பும், இவ் வுடம்பிற் பொருந்திய அரிய உயிரும், மன முதலிய கரணங்களும் கட்டு நீங்கிய

பற்றற்ற இடத்தினில் நின்று அங்கு எழும் உணர்வினலே, எல்லா வாதிகளும் சமய ஞானமும் ஒதுங்கி ஒளிய, ஆம் என்றும் அன்றென்றும் நின்ற உண்மைப் பொருளை அறிவில்லாத சிறியேன் அறிந்து உய்ய உபதேசித்து அருள் புரிவீர்.

## விரிவுரை

புகரில் சேவல:—

புகர்—குற்றம். குற்றமில்லாத சேவல்.

சேவல்—ஓங்கார மந்திரததை ஒலியால் உணர்த்துவது. நாத ரூபமானது. ஆதலின் சேவலைச் செவ்வேட் பரமனர் கொடியாகக் கொண்டருளினர்.

அன்றியும் சூரியனுடைய வரவை உலகுக்குஉணர்த்துவது சேவல். ஒளியைக் கண்டு உவகையுறுவது. உறக்கத்தை விட்டு உலகினரை எழுப்பி உதவிபுரிவது. அதனல் குற்ற மில்லாதது என்றனர்.

தந்துர:—

தந்துரன்—தூக்கிய தெற்றுப்பல்லன். அரக்கர்களுக்கு பல் வரிசையாக அமையாமல் முன்னும் பின்னுமாகத் தூக்கி யிருக்கும்.

சங்க்ரமம்:—

சங்க்ராமம்—போர். அரக்கர்கள் போரை எப்பொழுதும் விரும்புகின்றவர்கள்.

நிருதர் கோப:—

அரக்கர்கள்மீது கோபிக்கின்றவன்.

முருகக் கடவுள் கருணையே வடிவானவர். அவர் உலக பிதா. உயிர்கட்குத் தந்தையுந் தாயுமானவர். அவருக்கு வான வரும் தானவரும் ஒன்றுதான். விருப்பு வெறுப்பு அற்றவர். இன்னரும் இனியாரும் அவருக்கு இல்லை. அப்படியாயின் அரக்கர்மீது கோபிப்பானேன்? மெலியாரை வலியார் ஒறுப்ப ரேல் வலியாரைத் தெய்வம் ஒறுக்கும். மெலிந்த மகனை வலிந்த மகன் அடிப்பானேல் தந்தை மெலிந்த மகன் பொருட்டு வலிந்த மகனைத் தண்டிப்பான். அதனல் தந்தைக்குப் பாரபட்சம் சாராது.

இனி சுரர்—சமம் தமம் உபரதி முதலிய தூய குணங்கள்; அசுரர்—ஆவா, வெகுளி, மயக்கம், பொருமை முதலிய தீய குணங்கள். தேவாசுரயுத்தம் என்பது தூய குணங்களுக்கும் தீய குணங்களுக்கும் நிகழும் போராட்டம் என அறிக. இறைவர் தூய குணங்களை ஆதரித்து தீய குணங்களை அடக்குவர்.



சேவக:—

சேவகன்—வீரன்.

சிறந்த வீரமூர்த்தி முருகவேள் ஆதலின் அவரை அருண கிரிநாதர்,

"திருச்செந்தூர்வரு சேவகனேசுரர் பெருமாளே"
— திருப்புகழ்.

"வளைகடல் கதற நிசிசரர் மடிய
மலையொடு பொருத முழுச்சேவகனே" — திருவகுப்பு.

என்று தெரிவிக்கின்றனர்.

மாலயனுதி தேவரையும் 108 யுகங்களாக ஏவல் கொண்டு வருத்திய சூராதியவுணர்களை அழித்தவர் முருகவேள் ஆதலின் அவரே முழுச் சேவகராவார்.

"எதிர் சூரேடேயமர் அடலாகி
அமரில் வீட்டியும் வானோர் தானுறு
சிறையைமீட் டரனர்பால் மேவிய
அதிபராக்ரம வீரா வானவர் பெருமாளே"
— திருப்புகழ்.

என்றிரு கண்புனல் பொழிய:—

இறைவன் உயிர்க்குயிராகப் பிரிவற நின்று இடையருது பெருங்கருணைபுரிகின்ருன். ஆதலின் அப்பரமபதியின் ஒப்பற்ற கருணையை எண்ணி எண்ணி உள்ளம் உருகுதல் வேண்டும். அதன் அடையாளமாகக் கண்களில் அருவிபோல் தண்ணீர் பெருகும்.

அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும். — திருவள்ளுவர்.

"விரும்பியே கூவினேன் அலறினேன் உலறினேன்
மெய்சிலிர்த்திருகை கூப்பி
விண்மாரி எனஎனிரு கண்மாரி பெய்யவே
வேசற்றயர்ந் தேனியான்" — தாயுமானர்.

இறைவனுடைய திருவருளைப் பெறுவதற்கு எளிமையான வழி அப் பரமகருணநிதியை நினைந்து குழந்தைபோல் விம்மி யழுது உருகுவதேயாகும்.

"சந்தித் தரஹர சிவசிவ சரணென
கும்பிட் டிணையடி யவையென தலைமிசை
தங்கப் புளகித மெழஇரு விழிபுனல் குதிபாய"
— திருப்புகழ்.

கண்ணீர்மல்கிக் காதலாகிக் கசிந்துருகும் அடியவர்களது உள்ளத்தை இறைவன் திருக்கோயிலாகக் கொண்டு நீங்காது உறைகின்ருன்.

சகமலா தடிமையில்லை தானலால் துணையுமில்லை
நகமெலாந் தேயக் கையால் நாண்மலர் தொழுதுதூவி
முகமெலாங் கண்ணீர்மல்க முன்பணிந் தேத்துந் தொண்டர்
அகமலாற் கோயிலில்லை ஐயன் ஐயாறனர்க்கே.

— அப்பரடிகள்.

அவிழ:—

உடம்பும் உயிருங் கரணங்களும் கழன்று நிற்றலே சிவயோக மென அறிக. அவைகளோடு ஒற்றித்து நிற்றலினல் உலகவாசனை யெய்துகின்றது.

செனித்த காரியோபாதி ஒழித்து ஞான ஆசார
சிரத்தையாகி யான்வேறென் உடல்வேறு
செகத்தியாவும் வேருக நிகழ்ச்சியாமனேதீத
சிவச் சொரூப மாயோகி எனஆள்வாய்.

—திருப்புகழ்.

யானும் அவிழ்ந்த இடம்:—

யானும் என்ற எச்சவும்மையால் எனது என்பதும் அற வேண்டும் என்று தெளிக. எனது - புறப்பற்று; யான்-அகப் பற்று. முதலில் அறவேண்டியது புறப்பற்று; பின்னர் அற வேண்டியது அகப்பற்று. நான் கெட்ட இடத்திலே சிவக்காட்சி தோன்றும்.

“ ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டென் உள்ளமும் போய்
நான் கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ”

— மணிவாசகர்.

“யானகிய என்னை விழுங்கி வெறுந்
தானய் நிலை நின்றது தற்பரமே”

— அருணகிரிநாதர்.

“நான்காண இடத்ததனைக் காண்பேம் என்று
நல்லோர்கள் நவில்கின்ற நலமே”

— இராமலிங்கர்.

அகிலவாதிகளும் சமயங்களும் அடைய ஆமென
அன்றேன நின்றதை:—

தேகமே ஆன்மா என்பவன் தேகாத்மவாதி; கரணமே ஆன்மா என்பவன் கரணத்மவாதி; இந்திரியங்களே ஆன்மா என்பவன் இந்திரியாத்மவாதி; ஆன்மாவைத் தவிர வேறு இல்லை என்பவன் ஏகான்மவாதி; பிரமத்தின் நிழலே உலகம் என்பவன் பிம்பப் பிரதிபிம்பவாதி; பால் தயிராவது போல் பிரமமே உலகமாகியுளது என்பவன் பரிணமவாதி; பிரம்மத் தினின்றும் உலகம் வந்தது என்பவன் விவர்த்தனவாதி;



கணந்தோறும் வேறுவேறு ஆன்மா உடம்பில் வருகின்றது என்பவன் கணபங்கவாதி; இப்படி பலப்பல வாதிகளும் சமய பேதர்களும் ஆம் என்றும் அன்று என்றும் கூறநின்ற அரிய பொருளை அடியேனுக்கு உபதேசிக்கவேணும் என்கின்ருர் அடிகள்.

“வாதமுஞ் சமய பேதமுங் கடந்த
மனோலய இன்ப சாகரமே!
ஏதுமொன் றறியேன் யாது நின்செயலே
இறைவனே ஏக நாயகனே”

— பட்டினத்தார்.

“உருவெனவு மருவெனவும் உளதெனவு மிலதெனவும்
உழலுவன பரசமய கலையாரவாரமற
உரையவிழ உணர்வவிழ உளமவிழ உயிரவிழ
உளபடியை உணருமவ ரநுபூதி யானதுவும்” — வகுப்பு.

மகரகேதன.......மதனராஜனை வெந்துவிழும்படி முனி:—

சிவபெருமான் கல்லாலின்புடையமர்ந்து நால்வர்க்கு எல்லாமாய் அல்லவுமாயிருந்ததனை யிருந்தபடி யிருந்துகாட்டி மௌன நிலையில் இருந்தபோது, தேவர்கள் தூண்டி வேண்ட, அவரை மயக்குதற் பொருட்டு வந்த மன்மதனைச் சாம்பராகும் படி நெற்றிக் கண்ணல் இறைவர் எரித்த தன்மையை இந்த ஆறுவரிகள் விளக்குகின்றன.

மகரம் என்ற மீன் கடலில் மட்டுமே வாழும். அதனல் அதற்கு மகராலயம் என்றுபேர். மகரமீன் வடிவாய் காதில் குண்டலம் தரிப்பார்கள். அதற்கு மகரகுண்டலம் என்று பேர். மகரமீனைக் கொடியில் எழுதியிருப்பதனல் மன்மதனுக்கு மகரத்துவஜன் என்று ஒரு பேருண்டு.

மன்மதனை எரித்த நெற்றிக் கண்ணிலிருந்து அவதரித் தவர் ஞானபண்டிதர். அவருடைய திருவடியை நினைப்பார் காமாதி பகைவர் இலராவார்.

## கருத்துரை

சிவகுமாரரே! வள்ளிதெய்வயானை கணவரே! அன்புமிக்கவனகி அடியேன் இருக்க, சமயவாதி களுக்கு எட்டாத உண்மைப் பொருளை உபதேசித்து அருள்புரிவீர்.

——:——

உ

திருச்சிற்றம்பலம்

# பெரியபுராணம்

## திருஞானசம்பந்த மூர்த்தி நாயனர் புராண

## விளக்கம்

(எ0-ம் பக்கத் தொடர்ச்சி)

**சம்பந்தர் கருணையின் திறம்**

பிறர் துன்பத்தைக் கண்டு இரங்குவதே அறிவின் பயன். அவ்வாறு இரங்குபவரே அறிஞர்.

அறிவினு லாகுவ துண்டோ பிறிதினேய்
தந்நோய்போல் போற்ருக் கடை.

என்பார் பொதுமறையாசிரியர்.

தனக்கென வாழ்பவர் சிறியவர்; பிறர்க்கென வாழ்பவர் பெரியவர்.

வயதிற் சிறியவரும் அறிவினாலும் அன்பினாலும் அருளாலும் பெரியவருமாகிய பிள்ளையார் திருமருகலில் தங்கியிருந்த போது நிகழ்ந்த கருணைத்திறத்தை நினைந்தால் கருங் கல்லும் உருகும்.

தந்தையாரால் பன்முறை ஏமாற்றமடைந்த அத்தை மகனுடன் வந்த வணிகனுடைய மகள், இனிக் கணவனாக இருக்கும் அவனுடன் திருக்கோயில் அருகில் தங்கியபோது, அரவந் தீண்ட வணிகன் மாண்டனன். அப் பெண்மணி கொழுகொம் பற்ற பூங்கொடிபோல் வாடி வருந்தினள். அவள் கற்பின் திறத்தை நமது சேக்கிழார் அடிகள் ஒரு பாதி வரியில் பகர்கின்றார். "வாளரவு தீண்டவுந்தான் தீண்டகில்லாள்" பற்பல மணிமந்திர மருந்துகளில் வல்லார் பெரிதும் முயன்றும் விடந்தீர்ந்திலது. அவள் அறிவுள்ளவள் ஆதலினாலே இறைவனை நோக்கிப் புலம்பலுற்றாள்.

. . . . . . . . மதியினாலே
சென்னியிளம் பிறையணிவர் கோயில் வாயில்
திசைநோக்கித் தொழுதழுதாள் செயலொன் றின்றாள்.

அது காரணமாகப் பிள்ளையாரால் விடந்தீர்ந்து உய்ந்த கணவனைப் பெற்றுக் களித்தாள். அதனால் துன்பம் நேர்ந்த போது வாளா வருந்தாது, உயிர்களின் அல்லலகற்றும் உறு துணையாகிய இறைவரைக் குறித்து நினைந்து நெகிழ்ந்து துதிக்க வேண்டும் என்பது விளங்குகின்றது.

இனி ஆண்டவனிடம் வேண்டித் துதிக்கின்ற அவ்வணிக மாது மிகுந்த நுட்பமாகவும் தக்க காரணங்களைக் காட்டியும் முறையிடுகின்றாள்.



(1) "இறைவனே! பன்முறையும் ஏமாற்றமடைந்த இவரை மணக்கவேண்டி நான் இவருடன் வந்தேன். இவர் அரவந்தீண்ட விடமுண்டு மாண்டார். தேவரீரோ அடியவர்களாகிய அமரர்வேண்ட ஆலகால விடத்தை யுண்டு அருள் புரிந்தீர். விடமுண்ட நீர் விடமுண்ட என் கணவனைக் காப்பாற்றும்.

(2) பாம்பில் துயிலும் பரந்தாமனும் விதிவிலக்கு எழுதும் பங்கயனும் போற்ற பாம்பை அணிகலமாக அணிந்திருக்கின்றீர். என் கணவனை எழுப்பினால் விதிக்கும் விதியும், காக்கும் கமலக் கண்ணனும் உம்மை ஏன் இவ்வாறு செய்தீர் என்று கேட்க அவர்கட்கு என்ன உரிமையுண்டு? அவர்கட்கு அத் தொழில்களை யளித்தவர் தேவரீரன்றோ? பெரும் பாம்பையே அணிகலமாய் பூண்ட நீர் சிறுபாம்பின் விடத்தைத் தணிக்கக் கூடாதோ?

(3) தன் கணவனாகிய மன்மதன் வெந்து சாம்பரானதைக் கண்ட என்னைப்போன்ற ஒரு பெண்மணியாகிய இரதிதேவி உம்மை வேண்டுதலும், அவளுக்கு உடனே திருவுளம் இரங்கி, மதனனை எழுப்பி அவளுடைய திருமாங்கல்யத்தைக் காத்தருளினீர். முன்னமே இவ்வாறு ஒரு பெண்மணிக்கு அருளிய நீர் எனக்கும் அவ்வாறு அருளலாமன்றோ? அருளாதொழியின் உம்மிடம் பாரபட்சம் சாருமே. சாம்பலான மதனனை எழுப்பிய நீர் மரணத் தருவாயில் உள்ள என் கணவனை எழுப்பலாமன்றோ?

(4) "கூற்றுவன் கொண்டுபோகும் உயிரை நாம் எவ்வாறு தருவோம்" என்று தேவரீர் கூறவும் நியாயமில்லை. முந்தி அடைக்கலம் என்ற அந்தணச் சிறுவனுக்காக அந்தகனை உதைத்து அருளியிருக்கின்றீர். இன்றும் அதுபோல் அடைக்கலம் புகுந்த பெண்ணாகிய எனக்காக இயம பயத்தினின்றும் நீக்கி என் கணவனுக்கு உயிர்ப்பிச்சை தாரும்.

என்று இவ்வாறு நான்குவித காரணங்களைக் கூறி காரணங் கடந்த கண்ணுதலை அவ்வணிகன் மகள் வேண்டுந் திறம் நனி இனிமையானது. அதனை அழகாக நமது அருட் பெரும் புலவர் அருளிச் செய்யும் அமிர்தப் பாடலைக் காண்க.

அடியாராம் இமையவர்தம் கூட்டம் உய்ய
அலைகடல் வாய் நஞ்சுண்ட அமுதே! செங்கண்
நெடியானும் நான்முகனுங் காணக் கோல
நீலவிட அரவணிந்த நிமலா! வெந்து
பொடியான காமனுயிர் இரதிவேண்டப்
புரிந்தளித்த புண்ணியனே! பொங்கர்வாசக்
கடியாரு மலர்ச்சோலை மருங்கு சூழும்
கவின் மருகல் பெருமானே! காவாய் என்றும்

வந்தடைந்த சிறுமறையோன் உயிர்மேற் சீறி
வருங்காலன் பெருங்கால வலயம் போலும்
செந்தறுகண் வெள்ளெயிற்றுக் கரியகோலஞ்
சிதைந்துருள உதைத்தருளுஞ் செய்ய தாளா!
இந்தவிடக் கொடுவேகம் நீங்குமாறும்
யான் இடுக்கண் குழிநின்றும் ஏறுமாறும்
அந்திமதிக் குழவிவளர் செய்ய வேணி
அணிமருகல் பெருமானே அருளாய் என்றும்

விடியற்காலை வழக்கம்போல் வழிபாட்டிற்கு வந்துகொண்டிருந்த காழிவேந்தர் அப் பெண்மணியின் அழுகுரலைக் கேட்டுவாளாக நேரே திருக்கோயிலுக்குச் சென்றாரில்லை. ஏன்? திருக்கோயிலில் உள்ள இறைவரை உயிர்கள் தோறுங் காண்கின்றார். உயிர்கள் மீது அளவிறந்த கருணைகொண்டவர். பெண்ணின் அழுகுரல் "விளங்குதிருச் செவியிற் சார மேவுதலுந் திருவுள்ளக் கருணை மென்மேல் வைத்து" என்றதனாலும், அவளையணுகி அவள் வரலாற்றைக் கேட்டபின், "கற்றவர்கள் தொழுதேத்துங் காழி வேந்தர் கருணையினால்" என்றதனால் காழிப் பிள்ளையார் கருணைத் திறம் புலனாகின்றது.

இனி திருமயிலாப்பூரில் பெருவணிகராகிய சிவநேசருடைய புதல்வி பூம்பாவை அரவந் தீண்டி மாண்டனள். தந்தையார் பெரிதும் வருந்தி சுட்டு சாம்பரையும் என்பையும் ஒரு குடத்தில் இட்டு சேமித்துவைத்திருந்தனர். பிள்ளையார் திருமயிலைக்கு எழுந்தருளியபோது, அச்செய்தியை அடியவர் புகலக் கேட்டருளினர். திருக்கோயிலுட் சென்று கபாலீச்சுரப் பெருமானைக் கைதொழுது திருமதிற் புறம் வந்தவுடன் அளவற்ற அருளினால் வணிகரை நோக்கினார். என்பைக் கொணரச் செய்து என்பைப் பெண்ணாக்கி இன்னருள் செய்தருளினர்.

"ஆற்றும் இன்னருள்வணிகர் மேற்செல அருள்செய்வார்"

இவ்வாறு திருமருகலிலும், திருமயிலையிலும் அரவந் தீண்டி யயர்ந்த வணிகனையும், மாண்டு என்பாகக்கிடந்த வணிகன் மகளையும் கருணையினால் உய்வித்து உலகர் முன் உதவியருளினர். அவர் கருணைத் திறத்தை இதனால் தெற்றெனத் தெளிக.

## சம்பந்தர் அன்பின் திறம்

இறைவனுடைய திருக்கோயிலுட் சென்று சிவமூர்த்தியைக் காணும்போது பிள்ளையாரிடம் நிகழ்கின்ற அன்பின் திறத்தை அளவிட முடியாது. அதனை ஓரளவுக்குக் கூற வல்லார் சேக்கிழாரையன்றி யாவரே வல்லார். அவ்வாறு கூறிய இடங்கள் பல; அவற்றுட் சில ஈண்டுக் காட்டுதும். அன்பர்கள் கருத்துடன் படித்து இன்புறுக. அவ்வாறு ஆலய வழிபாட்டின்போது அன்பினால் நெகிழ்ச்சியடைதல் வேண்டும்.



### திருவாரூரில்

பணிந்து வீழ்ந்தனர்; பதைத்தனர்; பரவிய புளகம்
அணிந்த மேனியோ டாடினர்; பாடினர்; அறிவில்
துணிந்த மெய்ப்பொரு ளானவர் தமைக்கண்டு துதிப்பார்;
தணிந்த சிந்தையின் விரைந்தெழு வேட்கையில் தாழ்ந்தார்.

### திருமறைக்காட்டில்

அன்பினுக் களவுகாணார்; ஆனந்த வெள்ளமூழ்கி
என்புநெக் குருகநோக்கி இறைஞ்சிநேர் விழுந்துநம்பர்
முன்புநிற்பதுவும் ஆற்றார்; மொழிதடுமாற ஏத்தி
மின்புரை சடையார்தம்மைப் பதிகங்கள் விளம்பிப் போந்தார்.

### திருஆலவாயில்

ஆளும் அங்கணர் ஆலவாய் அமர்ந்தினி திருந்த
காள கண்டரைக் கண்களின் பயன்பெறக் கண்டு
நீள வந்தெழும் அன்பினால் பணிந்தெழ நிறையார்
மீள வும்பல முறைநில முறவிழுந் தெழுவார்.

அங்கம் எட்டினும் ஐந்தினும் அளவின்றி வணங்கிப்
பொங்கு காதலின் மெய்ம்மயிர்ப் புளகமும் பொழியும்
செங்கண் நீர்தரும் அருவியும் திகழ்திருமேனி
எங்கு மாகிநின் றேத்தினர் புகலியர் இறைவர்.

### திருக்கச்சி

பாடினர்; பணிவுற்றார்; பரிவுறும் ஆனந்தக்கூத்
தாடினர்; அகங்குழைந்தார்; அஞ்சலிதஞ் சென்னிபின்மேற்
சூடினர்; மெய்ம்முகிழ்த்தார்; சூகரமும் அன்னமுமாய்த்
தேடினர் இருவருக்குந் தெரிவரியார் திருமகனார்.

மருவியஏழிசை பொழிய மனம்பொழியும் பேரன்பால்
பெருகியகண் மழைபொழியப் பெரும்புகலிப் பெருந்தகையார்
உருகியஅன் புள்ளலைப்ப உமைதழுவக் குழைந்தவரைப்
பருகியமெய் யுணர்வினொடும் பரவியே புறத்தணைந்தார்.

திருஞானசம்பந்தர் திரும்பூம்புகலூரில் எழுந்தருளியிருந்தபோது, ஆளுடைய அரசுகள் வந்தனர். அரசுதனை எதிர்கொள்ளப் பிள்ளையார் புறப்பட்டு புகலூர் எல்லையிற் சென்று தொழுது வரவேற்றார். வாகீசர் தாம் திருவாரூர் தியாகப் பெருமானை வணங்கி வந்தசிறப்புக்களை ஓதினர். அது கேட்ட பிள்ளையார் அங்கிருந்தபடியே, அப்பொழுதே, "அடியேன் ஆரூர் சென்று சேவித்துவருவேன். தாங்கள் பூம்புகலூர் சென்று யாம் வருமளவும் இரும்" என்று கூறிவிட்டு ஆரூரை நோக்கிச் சென்றனர். இதனால் ஆளுடைய பிள்ளையாரது அன்பின் திறம் புலனாகின்றது.

## சம்பந்தர் அருளின் திறம்

புகலிவேந்தர் திருமதுரையம் பதியில் திருமடத்தில் அடியார் குழாத்துடன் தங்கியிருந்தனர். பொய்ம்மையும் அழுக்காறும் கொடுமையும் நிறைந்த சமணர்கள், சம்பந்தரது திருமடத்தில் மந்திரங்கள் சொல்லி மடத்தில் தீவைக்க முயன்று, அஞ்செழுத்து ஓதும் அடியார் திருமடத்தில் அவர் மந்திரத்தீ எய்தாமையினால், நேரேவந்து திருமடத்தில் தீவைத்தனர். அது பற்றும் பொழுது அடியார்கள் அதை அணைத்து, ஆளுடைய பிள்ளையார் பால் இதை மொழிந்தார்கள். "மாதவர் துயிலும் திருமடப்புறம்பு பழுதுசெய்வதோ பாவிகாள்" என்று பரிந்தருளி "என் பொருட்டவர் செய்த தீங்காயினும் இறையோன் அன்பருக்கிது எய்துமோ?" என்று கூறியருளினார். "அரசன் ஆளும் முறைமை வழுவினால் இது வந்தது" என்றும் திருவுள்ளம் பற்றினார்.

இனி அத்தீயை அரசன் மீது பிள்ளையார் ஏவினாரில்லை. புதிதாக ஏவும் ஒன்றை "பையவே" என்று கூறவேண்டிய பரிசிராது. வேறு என்கொல்?

குடிகள் செய்த பாவம் கொற்றவனைச் சாரும். இது நெறி முறை; மக்கள் செய்த வினை மாதாபிதாக்களையும், மாணவன் செய்த பாவம் ஆசானையும் சாருவதுபோல் என அறிக. சாமானியமானவர்கட்குச் செய்த பாவம் மன்னவனை சாரக் காலந்தாழ்க்கும். சத்தினிபாதம் எய்திய சிவஞானிகளாகிய எண்ணில்லாத சிவனடியார்கட்குச் செய்த இப்பெரிய பாவம் சாரு முறைப்படி எண்ணில்லாத வேகமாக அரசனைச் சார ஓடியது. அப்படி மிகப்பெரும் வேகமாகத் தாவிச் செல்லும் தீயினையே ஆளுடைய பிள்ளையார் அன்பின் திறத்தினால், "பையவே சென்று பாண்டியர்க் காகவே" என்று பகர்ந்தருளினார்.

[இந்த அரிய கருத்தை எனக்கு விளக்கியவர்கள் எனது ஞானசாரியராகிய பழநி "சித்தாந்த மஹாமஹோபாத்யாயர்" சித்தாந்த சரபம்; "காசிவாசி" ஈசானசிவாசாரிய சுவாமிகள்.]

இதற்கு ஆதாரம் "வெய்ய தீங்கிது வேந்தன் மேற்றெனும் விதி முறையால்" என்று சேக்கிழார் பெருமானே கூறுமாறு காண்க. அரசியல் நுணுக்கமும், நீதி நூன்முறையுந் தெரிந்த முதலமைச்சர் அன்றோ அவர்.

விதிமுறைப்படி இயல்பாகவே வேகமாகச் சென்ற வெப்பினைப் பையச் செல்லுமாறு பணித்தது அன்பின்திறம். அங்ஙனம் பணித்ததற்குரிய காரணங்களையும் தெய்வச் சேக்கிழார் செப்பாது விடுவாரோ?

முருகா

# கற்பு

## அநசூயை

எந்நாட்டினும் இனியது நமது பாரதநாடு. இந்நாட்டைத் தோன்றுதொட்டு பத்தினிகளும் பத்தர்களும் ஞானிகளும் இருந்து அலங்கரித்தார்கள். "பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்" என்பார் திருமூல நாயனார். இந்த மூன்றிலே முதன்மை பெற்றவர் பத்தினிகள். ஏன்? பத்தர்களையும், தத்துவ ஞானிகளையும் பெற்று உலகிற்கு உதவுகின்றவர்கள் பத்தினிப் பெண்களேயாவார். இமயமலையின் உயரத்தையும் அகல நீளங்களையும் கனத்தையும் அளந்தாலும் அளந்துவிடலாம்; பத்தினிப் பெண்டிரது பெருமையை யாராலும் எக்காலத்தும் அளக்கமுடியாது.

பத்தினிப் பெண்கள் மனங் கொதித்தால் ஏழு கடல்களும் வற்றிவிடும்; அவர்கள் சிறிது நடுங்கினால் அண்டங்கள் நடுங்கும். உலகங்கள் அனைத்தையும் ஒரு சொல்லினால் சுட்டு எரிக்கும் ஆற்றல் கற்புடைய மங்கையர்க்கு உண்டு என உணர்க. சீதாதேவி கூறும் வீரவுரையால் அது தெளியப்படும்.

அல்லன் மாக்கள் இலங்கைய தாகுமோ
எல்லை நீத்த உலகங்கள் யாவையும்
சொல்லினாற் சுடுவேனது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசென்று வீசினேன்.

திருமருகலில் கணவனைத் தக்காளை அரவந் தீண்டியுந் தான் தீண்டாது அழுது அல்லலுற்ற வணிக மாதின் நேரிய கற்பும், கணவன் திருவுள்ளப்பாங்கின் வழிநின்று, அமையம் வாய்த்தபோது கணவனரை சிவநெறியிற் செலுத்தி உலகை வாழ்வித்த மங்கையர்க்கரசியாரது சீரிய கற்பையும், வாக்கினாற்

பாண்டிமாதேவியார் தமது பொற்பில்
பயிலுநெடு மங்கலநாண் பாதுகாத்தும்
ஆண்டகையார் குலச்சிறையார் அன்பினாலும்
அரசன்பால் அபராதம் உறுதலாலும்
மீண்டுசிவ நெறியடையும் விதியினாலும்
வெண்ணீறு வெப்பகலப் புகலிவேந்தர்
தீண்டியிடப் பேறுடையன் ஆதலாலும்
தீப்பிணியைப் பையவே செல்க என்றார்.

திருப்பாச்சிலாச்சிராமத்தில் கொல்லிமழவன் மகளது முயலகன் என்ற நோயைத் தீர்த்தருளியதும், கொடிமாடச் செங்குன்றூரில், அடியார்க்கும் மற்றையர்க்கும் வந்த குளிர் சுரநோயைத் தீர்த்தருளியதும் பிள்ளையார் உயிர்கள்மீது வைத்த அன்பினால் என உணர்க.

(தொடரும்)

சொன்ன ஒரு காரணங்கொண்டே கணவனாக இருந்த கலிப் பகையார் மாண்டது கேட்டு உயிர்விடத் துணிந்து, தம்பியார் பெரிதும் வேண்ட, நூல் தாங்காது உயிர்தாங்கி, கைம்பெண் விரதம் மேற் கொண்டு சிவப்பணி செய்த திலகவதியாருடைய தெய்வக் கற்பையும், காவிரி வெள்ளத்தினால் கொள்ளப்பட்டு கடல் புகுந்த கணவனை மீட்ட ஆதிமந்தியின் உயரிய கற்பையும், கணவன் மாண்ட அக்கணம் உயிர் நீத்த பாண்டிமாதேவியின் பண்புடைக் கற்பையும் உன்னுந்தொறும் உன்னுந்தொறும் இறும்பூது எய்துகின்றதன்றோ?

முக்கணர்தண் டலைநாட்டில் கற்புடைமங்
    கையர் பெருமை மொழியப் போமோ?
ஒக்கஎரி குளிரவைத்தாள் ஒருத்திவில்வே
    டனையெரித்தாள் ஒருத்தி மூவர்
பக்கமுற அமுதளித்தாள் ஒருத்தி எழு
    பரிதடுத்தாள் ஒருத்தி பண்டு
கொக்கெனவே நினைந்தனையோ கொங்கணவா
    என்றொருத்தி கூறினளே.

என்று கற்புடைய காரிகையர்களது தனிப்பெரு மகிமைகளைப் படிக்காசுப் புலவர் பகர்கின்றார்.

உலகத்தின் ஏற்றம் அத்தனையும் பெண்களின் கற்பினாலேயே அமைகின்றன. கற்புடைய மங்கையர் வாழும் நாட்டில் மாதம் மும்மாரி பெய்யும்; அறம் வளரும்; மறந் தளரும்; பயிர் விளையும்; உண்மை உயரும்.

ஒருவனுக்கு ஆயுள், கல்வி, செல்வம், புகழ், பெருமை, உயர்வு முதலிய யாவும் கற்புடைய மனைவியினாலேயே உண்டாகும். "ஏரைப் பிடித்தவன் என் செய்வான்; பானை பிடித்தவள் பாக்கியம்" என்ற பழமொழியை யுணராதார் யாவர்?

மதுரை சோமசுந்தரக் கடவுளுக்கு வந்த ஆக்கம் அத்தனைக்கும் அம்மை அங்கயற் கண்ணியே காரணம் என்கின்றார் ஒரு புலவர்.

ஆனையுரித்ததன் தோலையும் போர்த்தே அடியும்பட்டு
மானம் இழந்தே இரந்து திரிந்த மதுரைச்சொக்கர்
ஞான மிகப்பெற்று வாழ்வதெல்லாம் சொக்கநாயகியாள்
பானைபிடித்த முகூர்த்தத்தினால் வந்த பாக்கியமே.

பெண்களுடைய கற்புநெறியே உலகிற்கு அச்சாணியென வுணரவேண்டும். கணவனைக் கடவுளாக எண்ணி வழிபடும் மாதர்கள் பலர் வாழ்ந்தபடியால் இந்நாட்டிற்கு எந்நாட்டிற்கும் இல்லாத பெருமை ஏற்பட்டது. குடும்பச் சுமையைப் பொறுமையுடன் தாங்கும் ஆற்றல் பெண்மணிகளிடமே அமைந்திருக்கின்றது. குளிர்ந்த உள்ளமும், தணிந்த பார்வையும் பெண்க



ளிடம் இயல்பாக இலகுகின்றன. அதனாலேயே தாங்கும் பூமியைப் (பெண்ணாகப்) பூமாதேவி யென்றும், தண்ணிய நீரைக் கங்காதேவி யென்றும் உருவகஞ் செய்திருக்கின்றார்கள்.

கல்விக்கு அதிதேவதையும் செல்வத்துக்கு அதிதேவதையும் பெண்களாகவே கலைமகளென்றும், திருமகளென்றும் கூறப்படுகின்றன. தருமத்திற்கு அதிதேவதையாக அறம் வளர்த்தநாயகி, அன்னபூரணேச்வரி யென்றும் பேசப்படுகின்றன.

சத்து சித்து ஆனந்தம் என்ற மூன்றில் இடையில் இருப்பது சித்து. சித்து—ஞானம். ஞானம் என்பதும் அறிவு என்பதும் ஒருபொருட்கிளவிகள். சத்து—சிவம்; சித்து—உமை, ஆனந்தம்—முருகன். எனவே அறிவைப் பெண்ணென்று கூறுமானால் பெண்ணின் பெருமையைப் பேசவல்லார் யாவர்? ஞானம்பிகையென்றும் ஞானப் பூங்கோதையென்றும் உமாதேவியாரை ஞான நூல்கள் கூறுகின்றன. சர்வம் சத்திமயமாகவே அமைந்திருக்கின்றது. கற்புடைய மனைவியையுடையானுக்கு இம்மை நலமும் மறுமை நலனும் ஒருங்கே கிடைக்கும்.

உலகங்களெல்லாவற்றையும் ஆக்கல் அளித்தல் அழித்தல் என்ற முத்தொழில்களால், தோற்றுவித்தும், நிலை நிறுத்தியும் ஒறுக்கியும் தலைமைபெறும் மும்மூர்த்திகளின் பெருமை அளவிடற்கரியதன்றோ? திரிமூர்த்திகளின் தன்மையையும் வன்மையையும் என்னென்று கூற முடியும்? இத்தகைய பெருமை மிக்க திரிமூர்த்திகளும் ஒரு பத்தினிப் பெண்மணியின்முன் பாலர்களாகித் திரிமூர்த்திகளாகித் (திரிகின்ற மூர்த்திகள்) திகைத்தார்கள் என்றால், கற்புடைக் காரிகையாரது புகழ் கடலினும் விசாலமானதன்றோ? தேவர்கள் வணங்கும் மூவரும் ஒரு கணப்பொழுதுக்குள் அநசூயையின் கற்பின் மாண்பினால் குழந்தைகளாகி விளையாடினார்கள் எனின் அநசூயா தேவியின் பெருமை ஏட்டினும் எழுத்தினும் அடங்குவதோ? இம்மாதரசியின் பெருமையை மங்கையர்கள் அனைவர்களும் அறிந்து உய்ய வேண்டும். அநசூயையின் அரிய வரலாற்றை அன்புடன் படிப்போரும் கேட்போரும் பாரில் எல்லா நலங்களும் பெறுவர்.

மண்ணினும் விண்ணினும் மாண்பு மிக்கவள்
பண்ணினும் இனியசொல் பகரும் பண்பினள்
நண்ணினர்க் கருளந சூயை நற்கதை
எண்ணினும் இருவினை யிடர்கள் நீங்குமே.

ஆதலினால் இப் புனிதவதியின் புனிதமான புண்ணிய வரலாற்றைக் கூறுதும். படித்து இன்புறுக.

தோற்றம்

கல்லினும் வலியமெய்க் கற்பு மேவிய
சொல்லினுக் கனியந சூயை மாக்கதை
இல்லினுக் கிசையுநல் லினிய மாதரார்
அல்லினும் பகலினும் அறிந்து வாழ்வரால்,

தட்சப்பிரஜாபதி நெடிது காலந் தவம்புரிந்தனர். அவர் புரிந்த அருந்தவப் பயனால் அழகிய ஒரு பெண் குழந்தை பிறந்தது. அம்மகவுக்கு அநசூயை என்று பிதா பேரிட்டனர். அசூயை—பொறாமை, அநசூயை—பொறாமை யில்லாதவள். அசூயை யில்லாதவள் அநசூயை.

திருவினும் மிக்க உருவுடைய அத்திருமகளைக் கண்டு தாயுந் தந்தையும் உள்ளம் உவந்தார்கள். அப் பெண்மணி அவதரித்தபோது எங்கும் இனிய நறுமணம் வீசியது. தண்ணீர் தெளிந்திருந்தது. வானம் மலினமில்லாமல் விளங்கியது. அந்தவேளையிலே எல்லோருடைய உள்ளங்களும் மகிழ்ச்சி மிகுந்திருந்தன. பூமரங்கள் பூத்துக் குலுங்கின. பழங்கள் நன்கு பழுத்து உதிர்ந்தன. மெல்லிய பூங்காற்று வீசியது. தந்தையார் தன் புதல்வியாகிய அநசூயையை ஓதுவித்தனர். சகல கலைகளும் அந்த அம்மையிடம் தானே வந்து அடுத்தன. கலைகளில் தேர்ந்த அவள் அமைதியின் வடிவமாகவும், அறிவின் கருவூலமாகவும், பொறுமைக் கடலாகவும் காட்சியளித்தனள்.

### திருமணம்

அநசூயாதேவியார் திருமணப் பருவத்தை எய்தினர். திருமகளாரது அரும் பெருங் குணங்களுக்கு ஏற்ற கணவனர் எங்கே என்று தக்கனர் ஆராய்ந்தார். எல்லா நலன்களும் அமைந்த புதல்வியாருக்குத் தகுந்த மணமகன் அமைவது அரிது அன்றோ? மணமகளுக்கு ஏற்ற மணமகன் அமையாது இடர்ப்படுவோர் பலர். அவ்வாறு பொருந்தாது ஏற்றத்தாழ்வுள்ள மணமக்களைக் கலியாணம் புரிந்துவிட்டு அல்லலுறுவோர் மிகப்பலர். அது விஷயத்தில் அறிவுள்ளோர் மிகவும் எச்சரிக்கையாக இருந்து, மகளுக்கு ஏற்ற மணமகனைத் தேர்ந்து தெளிந்து மணஞ் செய்விப்பார்கள்.

அத்ரீ என்ற ஒரு சிறந்த முனிவரர் காமதவனத்தில் அரிய தவஞ் செய்து கொண்டிருந்தனர். அவர் தவத்தினால் உலகங்களையெல்லாம் வென்றவர். காமம் வெகுளி மயக்கம் என்ற மூன்று குற்றங்களும் இல்லாதவர் ஆதலினால் அத்திரி முனிவர் என்று உலகம் அவரை அழைக்கும். திரி—மூன்று; அகரம் அன்மைப் பொருளில் வந்தது. திரி இல்லாதவர் அத்திரி,காமம் வெகுளிமயக்கம்என்றமூன்றுங்கெட்டமுனிவர்பெருமான் அவர்.

காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமங் கெடக்கெடும் நோய். — திருவள்ளுவர்.

பூமியில் வந்த இரண்டாவது சூரியனைப்போல் அவர் விளங்குவார். புலன்களை வென்று நலன்களைப் பெற்றவர். சினத்தையும் மனத்தையும் அடக்கி தவம் என்னும் தனத்தையடைந்தவர். அவருடைய தவ வலிமையால் சராசரங்கள் யாவும் அவருக்கு வசமாயின.



தட்சப்பிரஜாபதி தனது தவப் புதல்வியாராகிய அநசூயா தேவியை அத்திரி முனிவருக்குத் திருமணஞ் செய்து கொடுக்க எண்ணி உறுதி செய்தார். தேவர்களுக்கும் மூவர்களுக்கும், முனிவரர் யாவர்களுக்கும் திருமண ஓலை அனுப்பினர். மிகப் பெரிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. வந்தவர்கள் தங்குவதற்குரிய இட வசதிகளும், உணவு வசதியும் செய்யப்பட்டன. அத் திருமணத்தில் காமதேனுவும் கற்பகத்தருவும் தேவ உருவந் தாங்கி வந்தவர்களை உபசரித்தன.

வேதவொலி விண்ணைப் பிளந்தது. கீதவொலி கடலை வென்றது; மங்கல வாத்தியத்தின் நாதம் எட்டுத் திசைகளையும் செவிடுபடுத்தியது. தட்சர் தனது தகுதிக்கு ஏற்ப எல்லா வகையான சிறப்புக்களுடன் அநசூயையை அத்திரி முனிவருக்குத் திருமணஞ் செய்து தந்தனர். அத் திருமணத்தைக் கண்டவர்கள் கண்ணுங் கருத்துங் குளிர்ந்தன. எல்லோருந் தங்களைப் பாக்கியசாலிகளாகக் கருதிக் கொண்டார்கள். மணமக்களை வாழ்த்தினார்கள்; வணங்கினார்கள்; போற்றினார்கள்; புகழ்ந்தார்கள். "இதுவரை இது போன்ற திருமணத்தை யாம் பார்த்ததே யில்லை" என்று ஒவ்வொருவரும் உரைத்தார்கள்.

அவியுணவினுஞ் சிறந்த செவியுணவாக நாரதாதி முனிவர்கள் பாடினார்கள்; அரம்பையர்கள் ஆடினார்கள்; வானவர் மலர்மழை பொழிந்தார்கள்; 'அத்திரிமுனிவர் வாழ்க; அநசூயை வாழ்க' என்று மொழிந்தார்கள். அட்சதை தெளித்தார்கள். அகமிகக் களித்தார்கள். வந்தவர்களை வரவேற்று தட்சர் உபசரித்து உவகை செய்து அனுப்பினர். எல்லோரும் தத்தம் இருக்கை சென்று, இத் திருமணத்தின் சிறப்புக்களைப் பற்றியே எண்ணி எண்ணி உரையாடிக் கொண்டிருந்தார்கள்.

### இல்வாழ்க்கை

காமத வனத்திலே ஒரு இலைக்குடிலில் (பன்னசாலை) அநசூயா தேவியார் தன் கணவனர் அத்திரி முனிவர் பெருமானுடன் நல்லறமாகிய இல்லறவாழ்வில் வாழ்வாராயினர்.

வேலையுஞ் சேலையும் வென்ற கண்ணினள்
பாலையுந் தேனையும் பழிக்கும் இன்சொலாள்
காலையும் மாலையுங் கணவனர் பதம்
சோலைநன் மலர்கொடு தொழுது சூடுவாள்.

வைகறையில் எழுந்து நீராடி திருநீறுங் குங்குமமுந் தரித்து, கமண்டலத்தில் தண்ணீர் எடுத்து, கணவனர் எழுந்தவுடன், அவருடைய திருவடியைத் தண்ணீரால் அபிஷேகஞ் செய்து, நறுமலர் சூட்டி மும்முறை வணங்கி மகிழ்வார். மாலையும் அவ்வண்ணமே பூசிப்பார். கணவனர் திருவடியை அலம்பிய தண்ணீரை ஒரு இலைத் தொன்னையில் எடுத்து

வைத்து, உச்சிப்பொழுதிலே கணவனுர் உண்டபின், பாத தீர்த்தத்தை உள்ளங்கையில் விட்டு மும்முறை உண்டு, பின்னர் உணவு உட்கொள்ளும் நியதியை மேற்கொண்டனர். கணவனுருடைய தவத்திற்குரிய சாதனங்களை அமைத்துக் கொடுப்பார். கணவனுர் கருத்தறிந்து ஏவாமுன்னம் மூவா மருந்தென நின்று பணிவிடை புரிவார். அத்திரிமுனிவர் சிவத்தைப் பேணி தவத்திலிருக்கும் போது, தாமும் அவர் அருகில் இருந்து சிந்தையை யடக்கித் தவம் புரிவார். கனியமுதம் போன்ற இனிய மொழிகளால் கணவனுரைக் களிப்புறச் செய்வார். அவர் எந்த வேளையில்தான் துயில்புரிகின்ருர் என்றதை அமரரும் அறிந்திலர். இனிய கனிகளைத் துண்டுசெய்து தேனில் கலந்து கணவனுருக்குப் படைத்து ஊட்டுவார். அம்மையார் கைபட்ட மாத்திரத்தில் புளிக்கின்ற கனிகளும் அமுதினும் உயர்ந்த சுவை உடையதாகி இனிக்கும். அவர் கரம்பட்டால் பட்டமரம் தளிர்க்கும். மதயானைகள் தமது துதிக்கைகளால் உலர்ந்த விறகுகளைக் கொணர்ந்து அம்மையார் பன்னகசாலைக்கு முன் குவிக்கும். அங்கு விலங்குகள் பகையின்றி உறவுகொண்டு உலாவும். பூனையும் எலியும் ஒன்றுகூடி விளையாடும். பாம்பு தவளைக்குத் தனது பணமகுடத்தினுல் நிழல் கொடுக்கும். அம்மையார் வாழும் கானகத்தில் மரங்கள் இன்ன காலத்தில்தான் பூப்பது—இன்ன காலத்தில்தான் பழுப்பது என்ற கால நியதியின்றி, எல்லாக் காலங்களிலும் பூக்கும்; எல்லாக் காலங்களிலும் காய்த்துக் கனியும். மயில்கள் மகிழ்ச்சியுடன் தோகையை விரித்து களிநடம்புரியும். நாகணவாய்ப் புள்கள் இனிது பாடும். புள்ளிமான்கள் துள்ளி விளையாடும். யானைகள், யாளிகள், சிங்கங்கள், வேங்கைகள் முதலிய கொடிய விலங்குகள், அநசூயாதேவியின் அருகில் வந்தவுடன் பரம சாதுவாகி அமைதியாக உலாவும். காற்றும் மிதமாக வீசும். அந்த அம்மையாரை வணங்கும் பொருட்டு காலையும் மாலையும் தேவமாதர்களும், யட்சமாதர்களும், முனிவர் பன்னிகளும் வருவார்கள். அத்திரிமுனிவருடைய மாணவர்கள் ஆச்சிரமத்தைச் சுற்றி வேத கீதங்களை முழக்கிக் கொண்டிருப்பார்கள்.

அத்திரி முனிவருடைய ஆச்சிரமம் எண்ணமுடியாத பெருமை நிறைந்து கலாநிலையமாகக் காட்சியளித்தது. மாட்சிமை மிகுந்த அந்த இடத்திற்கு வந்தவுடன் தீயவர்களும் தூயவர்களானுர்கள். அங்கு வந்தவுடன் மனேலயந் தானே வந்து சமாதி யின்பத்தைப் பெறுவார்கள். இன்னும் எத்தனையோ மகிமையுடையதாக அது விளங்கியது.

(தொடரும்)

உ

முருகா

# கோகர்ண யாத்திரை

(எகூ-ம் பக்கத் தொடர்ச்சி)

## மூகாம்பிகை

கொல்லூர் என்பது பல மலைகளுக்கு இடையில் பெருங் கானகத்திற்கு நடுவில் உள்ள ஒரு அரிய திருத்தலம். அங்கு எழுந்தருளியுள்ள அம்பிகையின் திருப்பேர் மூகாம்பிகை. இரவு அந்த அருமையான அம்பிகையை அன்புடன் வழிபட்டோம்.

## மூகாம்பிகை வரலாறு

கோலமாமுனிவர் தவஞ்செய்து திருவருள் பெற்ற இடம் ஆதலின் கோலாபுரம் என்று அதற்கு பேர் ஏற்பட்டது. கோலாபுரம் என்பது கொல்லூர் என இப்போது வழங்குகின்றது.

மூகாசுரன் என்கின்ற ஒரு அசுரன் பிரமதேவரை நோக்கித் தவஞ்செய்து பல வரங்களைப் பெற்றுன். இந்தக் கானகத்தில் தவஞ்செய்யும் கோலமாமுனிவர் முதலிய முனிவர்களுக்கு இடுக்கண் பல புரிந்துவந்தான். மூகாசுரனுடைய துன்பத்தைப் பொறுக்கமாட்டாத முனிவர்கள் அவனை அழிக்க வழி யாது? என்று ஆராய்ந்தார்கள்.

மூகாசுரன் முனிவர்கள் தன்னைக் கொல்ல முயல்கின்ருர்கள் என்று அறிந்து சிவபெருமானை வேண்டிப் பெருந்தவம் புரிந்தான். இமையவரும் இருடியரும் சிவபெருமானைத் துதித்தார்கள். சிவபெருமான் தோன்றி, "என்ன வரம் வேண்டும்" என்று கேட்டருளினுர். "பொங்கர வணிந்த சங்கரா! திங்கள் சூடிய கங்காதரா? மூகாசுரன் தேவரீரை நோக்கித் தவஞ்செய்கின்ருன். அவன் விரும்பும் வரங்களைத் தேவரீர் வழங்காதிருக்கவேண்டும்" என்று வேண்டினுர்கள்.

சிவபெருமான் "நாம் வேண்டுவார் வேண்டியதை வேண்டியவாறு தரும் நியதியையுடையோம். நீங்கள் அம்பிகையை வேண்டி இதற்குப் பரிகாரந் தேடிக்கொள்ளுங்கள்" என்று அருள் புரிந்தார். முனிவர்களும் இமையவரும் "எந்தையே! தேவரீர் இங்ஙனமே இருந்து அருள்புரிய வேண்டும்" என்று வேண்டினுர்கள். ஆலமுண்ட நீலகண்டப் பெருமான் அங்கு சிவலிங்கவடிவாக எழுந்தருளினுர்.

பின்னர் தேவர்களும் முனிவர்களும் அம்பிகையை நோக்கிப் பெருந்தவம் புரிந்தார்கள். அவர்கள் தவத்திற்கு இரங்கி உமையம்மையார் தோன்றி யருளினுர். அமரர்களும் அருந்தவரும் அம்பிகையைத் தொழுது, "அகிலாண்ட கோடி யீன்ற அன்னையே! மூகாசுரனுல் நாங்கள் ஆலையிலிட்ட கரும்புபோல் நொந்துவிட்டோம். அவன் மேலும் எங்களைத் துன்புறுத்தக் கருதி பிறைசூடிய பெருமானை நோக்கிப் பெருந்தவம் புரிகின்

றுன். கருணைக் கடலாகிய கண்ணுதற் கடவுள் மேலும் வரங் கொடுத்தால், மீட்டும் எங்களை வாட்டுவான். ஆதலின் அவனுடைய கொடுமை எமக்கு எய்தாவண்ணம் காத்தருள்வீர்" என்று வேண்டினார்கள்.

பார்வதி தேவி, "அஞ்சன்மின்" என்று அருள்புரிந்தனர். மூகாசுரனுடைய தவத்திற்கு இரங்கி சிவபெருமான் அவனுக்கு முன்னே தோன்றி, "யாது வரம் வேண்டும்?" என்றார். அம்பிகை அவனுடைய நாவு அசையாவண்ணம் அவனை ஊமையாக்கிவிட்டனர். இல்லையேல் உலகத்திற்குக் கேடு விளைவிக்கும் வரங்களைக்கேட்டிருப்பான். ஊமையாகிய அரக்கன் "திறுதிறு" என்று விழித்தான். ஒருவரமும் கேளாமையால் மணிகண்டர் மறைந்தருளினர்.

இவ்வாறு தன்னை ஊமையாக்கியது உமையம்மையார் என்று அறிந்த மூகாசுரன் உமாதேவியார் மீது போருக்குச் சென்றான். உலகீன்ற உத்தமி அவனுடன் போரிட்டு அவனை மாய்த்தருளினர். மூகம்—ஊமை. ஊமையாகிய அந்த மூகாசுரனைக் கொன்றமையால், அவனுடைய பேர் அழியாதிருக்கும் பொருட்டு, அவனுடைய பேரை அம்பிகை ஏற்று மூகாம்பிகை என்று யாவரும் போற்ற நின்று சிவபெருமானைப் பூசித்தனர்.

இங்கு சரஸ்வதியும் இலக்குமியும் இருபுறங்களிலும் அம்பிகைக்குச் சேடியர்களாக இருக்கின்றார்கள். நாள்தோறும் சரஸ்வதியை வெளியே உள்ள ஒரு மண்டபத்தில் எழுந்தருளப் புரிந்து சங்கீதம் பாடுகின்றார்கள். கல்வியை வேண்டிப் பலர் இங்கு வந்து அம்பிகைகோயிலில் விரதம் இருந்து வழிபடுகின்றார்கள். மிகவும் வரதமான அம்பிகை.

சிவலிங்கத்தில் ஒரு சுவர்னரேகை தெரிகின்றது. வெய்யிலில் கண்ணாடியைக் காட்டி அந்த ஒளி சிவலிங்கத்தின் மீது படச் செய்தால் அந்தப் பொன்ரேகை தெரிகின்றது.

அன்று இரவு அந்த ஊர் குருக்கள் வீட்டில் தங்கினோம். கோயிலுக்கு எதிரில் ஒரு சிறு ஓடை ஓடுகின்றது. அந்த ஓடைக்கு அருகில் அந்த வீடு. நாங்கள் அங்கு சமையல் செய்து உண்டு உறங்கினோம்.

கர - மாசி 9 வியாழன்

கோயிலுக்கு வடமேற்கில் ஒரு அருமையான சிறு நதி ஓடுகின்றது. தூய்மையான தண்ணீர். காலையில் எழுந்து அந்தத் தண்ணீரில் எங்கள் உடைகளையெல்லாம் தோய்த்து நன்றாக முழுகி உடலும் உள்ளமும் குளிரப்பெற்றோம்.

காலைவழிபாட்டை முடித்துக்கொண்டு கோயிலுக்குச் சென்றோம். எல்லாத் திருவாபரணங்களையுஞ் சாத்தி யலங்கரிக்கவும், பாலபிஷேகம், சகஸ்ரநாம அர்ச்சனை முதலியன செய்யவும் நாற்பது ரூபாய் தேவஸ்தானத்தில் கொடுத்தோம். அந்த



ஆலய அதிகாரி எங்களை அன்புடன் உபசரித்தார். கோயில் திருவாபரணங்களையெல்லாம் எடுத்துக் காட்டினர். அதில் நளச்சக்ரவர்த்தி அம்பிகைக்கு அளித்த ஒரு பதக்கம் குறிப்பிடத்தக்கது. அதில் உள்ள பெரிய பச்சை மட்டும் 25 லக்ஷம் மதிக்கின்றார்கள் என்று அவர் கூறினர். அவ்வளவு அழகிய பச்சையை நாங்கள் இதுவரை எங்கும் கண்டதேயில்லை.

மணி அப்போது காலை 9 இருக்கும். எங்களுடன் வந்த ஒரு அன்பருடைய 2 வயதுக் குழந்தை வெளிப்பிரகாரத்தில் சிறுநீர் விட்டுவிட்டது. உடனே கோயில் நிர்வாக அதிகாரி பூசையை நிறுத்திவிட்டு, எங்களிடம் ரூ. 5-4-0 வசூல் செய்து யாகம் வளர்த்தி ஸ்ரீருத்ரம் கூறி, வாஸ்து சாந்தி செய்து பிராயசித்த அபிஷேகம் புரிந்து, பிறகு உச்சிக்காலம் நடந்து, அதற்குப் பிறகு எங்களுடைய கட்டளை அபிஷேகம் செய்து அலங்காரம் புரிந்து ஆராதனை செய்து பிரசாதம் வழங்கினார்கள். எல்லாம் முடிய பகல் 2.30 மணி ஆகிவிட்டது. ஒரு சிறு குழந்தை வெளிப்பிரகாரத்தில் சிறுநீர் விட்டதற்கு இந்தப்பாடு ஆகிவிட்டது. அது எங்கட்குப் பெரும் வியப்பாக இருந்தது. நம் நாட்டுக் கோயில்களில் பெரியவர்கள்கூட மனம் அஞ்சாமல் செய்யும் அசுத்தங்களை எண்ணி எண்ணி ஏங்கினோம்.

அம்பிகை சிவலிங்கத்திற்குப் பின்புறம் பத்மாசனமிட்டு அமர்ந்து தவஞ் செய்கின்ற கோலத்தில் விளங்குகின்றனர். பார்க்கப் பார்க்கப் பரமானந்தமான தரிசனம். தனிமையும் இனிமையும் உள்ள அந்த ஆலயத்தின் சிறப்பு நேரே கண்டவர்க்கே ஒருவாறு விளங்கும்.

ஆதி சங்கராச்சாரிய சுவாமிகள் இந்த அம்பிகையை வழிபட்டு 500 சுலோகங்கள் பாடியிருக்கிறார். அதற்கு "மூக பஞ்சசதி" என்று பேர். அங்கிருந்து 5 கல் தொலைவில் உள்ள ஒரு மலைமீது சங்கராச்சாரியர் தவம் புரிந்த இடம் இருக்கின்றதென்று கூறினார்கள்.

மூகாம்பிகை கோயிலில் தென் கிழக்கில் முருகவேள் திருக்கோயிலும், வடகிழக்கில் வீரபத்திரர் திருக்கோயிலும் திகழ்கின்றன. இங்கு வீரபத்திரருக்கு விசேட மகிமையும், அவருக்கு விபூதி அர்ச்சனையும் சிறப்பாக அமைந்திருக்கின்றன.

அன்று பகல் சமையல் செய்து உணவு கொண்டு, மாலை 7 மணிக்கு பஸ் ஏறிப் புறப்பட்டு இரவு 8 மணிக்கு மீண்டும் பைந்தூர் வந்து சேர்ந்தோம். கொல்லூருக்கும் பைந்தூருக்கும் 16 கல்.

பைந்தூரில் சிவராத்திரிக்கு கோகர்ணம் போகும் யாத்திரீகர்களை உபசரிப்பதையே முக்கிய கடமையாகக் கொண்ட ஒரு டாக்டர் வீட்டில் தங்கினோம். அவர் வீடு கடல்போல் விசாலமாக அமைந்திருந்தது.

உ

# வேதம்

[ திரு. சு. சிவபாத சுந்தரம் பிள்ளை B. A. ]

## வேத முதல்வர்

வேதம் சிவபிரானல் அருளப்பட்டதென்பது சைவக் கொள்கை. இதற்கு அகச்சான்று முற்றறிவு இல்லாதார்க்கு எட்டாத வாய்மைகள் வேதத்தில் உளவாதலாம். இவற்றுட் சிலவற்றை இக் கட்டுரையின் மூன்ருங் கூறு கிய வேதப் பொருள் என்னுந் தலைப்பின் கீழ்க் காண்க. இதற்குப் புறச் சான்றுகளாவன:

"மந்திர வேதங்கள் ஓதுநாவர்" என்னும் சம்பந்தர் திருவாக்கும், "ஓதினுர் வேதம் வாயால்" என்னும் அப்பர் திருவாக்கும், "மறைநான்கும் விரித்துகந்தீர்" என்னும் சுந்தரர் திருவாக்கும், "மிக்க வேதமெய்ந்நூல் சொன்னவனே" என்னும் மாணிக்க வாசகர் திருவாக்கும், வேதமோடாகமம் மெய்யாமிறைவனுல்" என்னும் திருமூலர் திருவாக்கும், "வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள்......ஆதியமலன் தருநூலிரண்டும்" என்னும் அருணந்திசிவத்தின் திருவாக்கும் பிறவுமாம்.

## வேதத்திற் கூறப்படும் கடவுள்

வேதம் பரமபதி ஒருவரையே கூறுகின்றது. ஆயினும், அவருடைய இயல்புத் தன்மையாலும் தொடர்புத் தன்மை

---

அங்கு மாலை வழிபாட்டைச் செய்தபின், கொல்லூரி விருந்தே ஆயத்தஞ் செய்து வைத்திருந்த கட்டமுதை வயிருர உண்டு, இடங் கொடுத்த அந்த உத்தமரை வாயார வாழ்த்தினேம். யாத்ரீகர்களாகிய எங்களுக்கு இரவில் தங்கவும் படுக்கவும் இடங் கிடைக்கின்றபோது உண்டாகின்ற மகிழ்ச்சியை யளவிட முடியுமோ? ஏன்? முன்பின் அறியாத ஊர்கள். எங்காவது கண்ட இடத்தில் தங்கினுல் கள்வர் பயம்; அயர்ந்து தூங்க முடியாது. ஆகவே தக்கார்க்கு இரவில் இடந்தருவது பெரும் புண்ணியமாகும்.

பைந்தூர் டாக்டர் இடங்கொடுத்ததோடு அமையாது தாய் போல் உபசரித்தனர். "என்ன வேண்டும்? என்ன வேண்டும்?" என்று பன்முறை கேட்டார். இப்படி அன்புள்ள உத்தமர்கள் உலகில் ஆங்காங்கு சிலர் இருக்கின்றனர். அத்தகைய உத்தமரை வேண்டியே உலகம் அழியாமல் இருக்கின்றது. சிறிதாவது மழை பொழிகின்றது.

எங்களுக்கு உடம்பில் மிக்க அசதி. இடம் வசதி; அசதி வசதி இரண்டும் ஒன்று கூடியதனுல் நன்கு கண்ணயர்ந்தோம்.

(தொடரும்.)



யாலும்* அவருக்குப் பல பெயர்கள் உள. அவைகள் அக்கி, ஆதித்யன், இந்திரன், வருணன், வாயு முதலியன. இவைகளும் பிறவுமாக நூறு பெயர்கள் பரமபதியைக் குறிக்கும் இயல்புடைமை சத்தியார்த்தப் பிரகாசம் என்னும் நூலில் இனிது விளக்கப்பட்டுள்ளது.

அது இச்சொற்களின் பகுதிகளாற் பெறப்படுகின்றது. அவற்றுட் சிலவற்றைக் கீழே காண்க.

| பெயர் | பகுதி முதலியன | பொருள் |
| --- | --- | --- |
| அக்கி | அஞ்சு—அறிதல் | முற்றறிவுடையவர் |
| ஆதித்தியன் | அ—இல்லை, து—அழிதல் | அழிவில்லாதவர் |
| இந்திரன் | இதி—சக்தி | அநந்தசக்தி யுடையவர் |
| குபேரன் | குவி—பரந்திருத்தல் | எங்கு முள்ளவர் |
| மித்திரன் | உமிதா—நேசித்தல் | உயிர்களில் இரக்கமுள்ளவர் |
| வருணன் | வரின்—நல்ல | உத்தமர் |
| வாயு | வா—அசைதல், அழித்தல் | பிரபஞ்சத்தைப்படைத்துக் காத்து அழிப்பவர் |

இப்பெயர்கள் பிற்காலத்திலே சிறு தெய்வங்களுக்கும், இவற்றுட் சில உயிரில்லாத பொருள்களுக்கும் பெயர்களாயின. அக்கி என்பது அக்னி தேவனையும் நெருப்பையும், ஆதித்தியன் சூரியதேவனையும் சூரியலோகத்தையும், இந்திரன் தேவேந்திரனையும் அரசனையும் குறிக்கின்றன. மற்றவைகளும் இவ்வாறே.

பரமபதி ஒருவரே என்று கூறும் வேதமந்திரங்கள் மிகப் பல. மேலே குறிக்கப்பட்ட பெயர்களும் அவைபோன்றவைகளும் பரமபதியையே குறிக்கின்றன என்பது இருக்குவேத முதல் மண்டலத்திற்றுனே சொல்லப்பட்டிருக்கிறது. அம் மந்திரம் பின்வருமாறு:—

"கடவுள் ஒருவரே; ஆயினும் அறிவாளிகள் இந்திரன், மித்திரன், வருணன், அக்கி, திவ்யன், சுபர்ணன், கருத்மாந், மாதரிஷ்வாந் என்னும் பல பெயர்களால் அவரைச் சொல்லுகிறுர்கள்." ০ "இந்தப் பிரபஞ்சம் முழுவதும் பரமபதி ஒருவராலே வியாபிக்கப்பட்டிருக்கிறது" என்று யசுர்வேதமும், "இந்திரன் என்பதும் அவரே" என்று சாமவேதமும், "பிரபஞ்சம் முழுவதிற்கும் பிராணனுயிருப்பவரே உமக்கு வணக்கம்" என்று அதர்வவேதமும் கூறுதலாலும், வேதங்கள் பரமபதி ஒருவரையே கூறுகின்றன என்பது பெறப்படுகின்றது.

---

* ஆரியத்திலே இவை முறையே சொரூப இலக்கணம், தடத்த இலக்கணம் எனப்படும்.

০ இப்பொருள் "ஒருவர்தாம் பல பேருளர் காண்மினே" என்னும் அப்பர் தேவாரத்திலும் உள்ளது.

அன்றியும், "மறையாயின பல சொல்லி யொண்மலர் சாந்தவை கொண்டு முறையான் மிகு முனிவர்தொழு முதுகுன் றடைவோமே" என்று சம்பந்தரும், "வேதத்தின் பொருளானய்" என்று அப்பரும், "மறையின் பொருளானவனே" என்று சுந்தரரும், "வேதங்கள் தொழுதேத்தும் விளங்குதில்லை கண்டேனே" என்று மாணிக்கவாசகரும் சொல்லியருளியவற்ருலும் வேதங்கள் பரமபதியையே பொருளாகக் கொள்ளுதல் உணரப்படும்.

இவற்றை நோக்காத மேல்நாட்டார் வேதம் காற்றையும், நெருப்பையும், நீரையும் துதிக்கின்ற தென்றும், எம்மனேருட் சிலர் அது இந்திரன், அக்கி, வருணன், முதலிய சிறுதெய்வங்களையே துதிக்கின்ற தென்றும் மயங்குகின்றனர்.

வேதப்பொருள்

வேதமானது அறிவு, தொழில், வாழ்த்து என முக்கூறுகளை (ஞானகாண்டம், கர்மகாண்டம், உபாசனகாண்டம்,) உடையது. இவைகளை இருக்கு, யசுர், சாமம், ஆகிய மூன்றும் முறையே விதந்துகூறும். அதர்வம் மூன்றையும் கூறும். அறிவுக்கூறு சத்திநிபாதர்க்கு வேண்டிய மெய்ப்பொருளையும், உலகர்க்கு வேண்டிய அறங்களையும், பிரபஞ்ச வாய்மைகளையும் உடையது. மெய்ப்பொருளாவது சிவஞானமாகிய மெய்யறிவால் மாத்திரம் அறியப்படுவது. இது முப்பொருட்டன்மை, தளைநீக்கம், வீட்டுப்பேறு முதலியவற்றைப் பற்றியதாம். மெய்ப்பொருள்களுட் சிறந்தவை பிரணவமும் திருவைந்தெழுத்துமாம்.

"இறைசத்தி பாசம் எழில்மாயையாவி உறநிற்கும் ஓங்காரத்துள்" என்றதிற் பிரணவத்தின் பெருமையும், "அருணூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின் பொருணூல் தெரியப் புகின்" என்றதிலும், "வேத நான்கினும் மெய்ப்பொருளாவது நாதனம நமச்சிவாயவே" என்றதிலும் திருவைந் தெழுத்தின் பெருமையும் ஒருவாறு சொல்லப்பட்டது.

முப்பொருள்களுள் கடவுளின் இயல்பு வேதத்திற் பல இடங்களிலு முள்ளது. அவற்றுள் ஒன்று (யசுர்.9-8) பின் வருமாறு:

"அந்தப் பரமபதியானவர் எங்கும் வ்யாபித்திருக்கிருர்; அவர் உயிராயுள்ளவர்; சத்தியே வடிவாயுடையவர்; எல்லாம் வல்லவர், நிர்மலர், பரிபூரணர், எல்லாம் அறிபவர், எல்லாவற்றையும் உள்ளும்புறம்பும் ஆளுபவர், நித்தியர். சுவதந்திரர், அவர் தொடக்க மீறில்லாதனவாகிய ஆன்மாக்களுக்குப் பொருள்களின் உண்மையான தன்மையை என்றும் உணர்த்தியருளுகின்ருர்."



இறைவனுக்கும் உயிர்களுக்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகள் இருக்கு வேதத்தில் (1-165-20) பின்வருமாறு கூறப்பட்டுள்ளது:—

"இறைவனும் உயிரும் நித்தியமானவை; அறிவுப் பொருளாந்தன்மையிலும் ஒத்திருக்கின்றன. அவைகள் பிரிவற நிற்கின்றன. இறைவன் உயிரில் வியாபித்திருக்கிருன். பல வகைப்பட்ட பிரபஞ்சங்களாகிய இலைகளையுடையதும், ஒடுங்குங் காலத்தில் தன்னியல்பில் நிற்பதுமாகிய பிரகிருதியும், என்றுமுள்ளது. இந்த மூன்றன் தன்மைகளும் என்றும் உள்ளவை. இறை, உயிர், ஆகிய இரண்டனுள் பிந்தியது பிரபஞ்சமாகிய மரத்தின் கனிகளை உண்ணுகிறது. முந்தியது உண்பதில்லை. அதுவே உள்ளும் புறமும் எங்கும் விளங்குகின்ற எல்லாப் பெருமைகளும் வாய்ந்த பொருள்"

அறங்களுக்குள்ளே "மனத்தின்கண்ணே மாசிலனுதல்" மிகவும் வற்புறுத்தப்படுகிறது. இது யசுர் வேதத்திலே தொடர்பாக ஆறு மந்திரங்களிலே (34-1.6) வேண்டப்படுகிறது. அவற்றின் சாரம் பின்வருமாறு:—

"என்னுடைய மனம் பிறர்க்கும் எனக்கும் நன்மையான எண்ணங்களைக் கொள்ளவும், எந்த உயிருக்கும் துன்பம் செய்யாதிருக்கவும், நல்லிச்சைகளை மாத்திரம் உடையதாகவும் அருளுக. தீமையையும் இழிவான கருத்துக்களையும் அது கைவிடுதற்கு அருளுக. அது எப்போதும் நன்மையையே நாடுக. யோகிகள் முக்காலத்தையும் அறிதற்குக் கருவியாயும், அழிவற்றதாகிய ஆன்மாவை மெய்ஞ்ஞானத்தோடு சேர்த்தற்கு வழியாயும் ஐம்பொறிகளோடு தொடர்புடையதாய் ஆன்மா அறிதற்குக் கருவியாயும் யோகமெனப்படும் வேள்வியை வளர்ப்பதாயுமுள்ள என் மனம் யோகத்தையும் மெய்யறிவையும் பெற்று எல்லாவிதமான துன்பத்தினின்றும் அறியாமையினின்றும் நீங்க அருளுக. குதிரையைத் தான் விரும்பு மிடங்களுக்கெல்லாம் செலுத்தும் குதிரைச் சேவகனைப் போல மனிதரை அங்குமிங்கும் செலுத்தி எல்லையில்லாத ஆற்றலோடிருக்கின்ற எனது மனமானது பொறிகளைத் தீய வழியிற் செல்லாது தடுக்கவும், என்றும் நல்வழியிலே செலுத்தவும் அருளுக."

சொற்கள் காலத்துக்குக்காலம் பொருள் வேறுபடுதல் உண்டு. அந்தணன் என்னுஞ் சொல் இரக்கமுடையவன் என்னும் பொருளை இயல்பாயுடையதாய் இக்காலத்திலே பார்ப்பானைக் குறிக்கின்றது. தாசி என்னுஞ் சொல் அடியவள் என்னும் பொருளையுடையதாய் இப்போது நாடகப் பெண்ணைக் குறிப்பதோடு நில்லாது கற்பில்லாதவள் என்றும் பொருள்படும். வேதம் மிகப் பழையதாதலால் அதிலுள்ள சில சொற்களின் வேதப்பொருளும் பிற்காலத்ததாகிய காவியகாலத்துப்

பொருளும் வேருயின. ஆதலால், காவிய காலத்தவரால் வேதத்துக்குச் செய்யப்பட்ட உரை சில இடங்களிலே தவறியது. அன்றியும் சிற்சில சொற்கள் தத்தம் கருத்தையுடைய பலவேறு பொருள்களைத் தொடக்கத்திலே குறித்தன. பின்பு அவைகள் காரண இடுகுறியாகி அவற்றுள் ஒன்றையே குறிக்க நேர்ந்தது. வேதச் சொற்களிற் சில இவ்வாறே ஒவ்வொன்றும் வேதத்தில் வெவ்வேறிடங்களில் வெவ்வேறு பொருளைக் குறிக்கின்றன. இவற்றுக்குக் காவியகாலத் துரைகாரர் அவ்வப் பொருளைச் சொல்லாமல் தமது காலத்துப் பொருளைக்கொண்டு பிழையான உரைசெய்தனர். அசுவ என்னுஞ் சொல் 'விரைவாகக்கொண்டு செல்வது' என்னுங் கருத்தை யுடைமையால் பெருங்காற்றையேனும், குதிரையையேனும், எவற்றினும் விரைவானதாகிய ஒளிக் கதிரையேனும் மின்சாரத்தையேனுங் குறிக்கலாம். வேத உரைக்காரர் வாம மார்க்கத்தவராயின், அல்லது கொலை வேள்விகளை அறிந்தவராயின் அசுவ என்ற சொல்லைக் கண்டவுடனே அதற்குக் குதிரை என்று பொருள் செய்து அது கொலைசெய்யப்பட்டது என்று பொருள் செய்தற்கும் வழிதேடுவார்கள். வைதிக சமயத்தை அநுசரியாதவர்களாகிய மேல்நாட்டாரது உரைகள் பிழைகள் நிறைந்தவைகளாகவே யிருக்கும். அவர்கள் வாயு என்பதைக் காற்றென்றும், இரண்யகர்ப்பன் என்பதைப் பொன் முட்டை யென்றும், பிரணவமாகிய ஓம் என்பதைப் பொருளற்ற பதர் மொழி யென்றும் கொண்டது நூதனமன்று.

இங்ஙனம் வேறுபடும் உரைகள் சில கூறுகளிலே சிறிதும் ஒற்றுமையில்லாதனவாயும் வேறு சில கூறுகளிலே சில பகுதிகள் மாத்திரம் ஒற்றுமையுள்ளனவாயுமிருக்கும். வேறு சில கூறுகள் முழுவதும் ஒற்றுமையுடையனவாயு மிருக்கும். அவ்விரு வகைக்கும் உதாரணம் கீழே காண்க.

### இருக்கு வேதம்- I-162-இரண்டாம் மந்திரம்

இதற்கு 'அறநெறியாய்ச் சம்பாதித்த பொருளையே பெற்றுப் பயன் படுத்தவேண்டுமென்று போதிப்போரும், நியாயநூல் முறைப்படி அழகாக விளவிக் கருதுவித்து அறிவிலிகளைத் திருத்துவோருமே அரசாட்சி செய்தற்கு வேண்டிய ஆற்றலையும் அதிகாரத்தையும் பெறத்தக்கவர்கள்' என்று ஒருவரும்,

'அவர்கள் சுத்தப் பொன்னலாக்கப்பட்ட அணிகளால் அலங்கரிக்கப்பட்ட குதிரைக்கு முன்னே யாகப்பசு இழுகப் பிடிக்கப்பட்டதாய்ச் செல்ல, அந்தப் புள்ளியாடு முன்பாக நடக்கும்போது சத்தமிடுகின்றது. அது இந்திரனுலும் புதனுலும் விரும்பப்படும் வழியே செல்கின்றது' என்று மற்றொருவரும் உரை செய்துள்ளனர்.



### இருக்குவேதம் I-162 பன்னிரண்டாம் மந்திரம்

இதற்கு, 'மாமிசத்தை விலக்கித் தானியங்களைச் சோதித்துச் சமைத்து உண்போருக்கு நல்ல சித்திகள் உண்டாகுக' என்று ஒருவரும்,

'குதிரையைச் சுட்டுச் சோதித்து 'இது நன் மணமுடையது, இதைக் கொண்டுபோ' என்று சொல்லி மாமிசத்தை உண்ணக் கொடுப்போருடைய செயலும் எம்மோடு இருக்க' என்று மற்றொருவரும் உரைசெய்துள்ளனர்.

வேதமந்திரங்களுக்குச் செய்த உரைகள் ஒன்றையொன்று முரணுதல் இந்த யுகத்தில் மாத்திரமுள்ளதன்று; முந்திய யுகங்களிலும் இப்படியான உரைகள் தோன்றி நடுநிலை யுடையாரை மயங்க வைத்துத் துன்பஞ் செய்தன என்பது பின்வரும் கந்த புராணத் திருவிருத்தங்களிற் காண்க.

முந்தொரு காலத்தின் மூவுல கந்தன்னில்
வந்திடு முயிர்செய்த வல்வினை யதனாலே
அந்தமின் மறையெல்லாம் அடிதலை தடுமாறிச்
சிந்திட முனிவோரும் தேவரு மருளுற்றார்.

ஆனதோர் பொழுதின்க ணமரரு முனிவோரும்
மாநில மிசைவரு மாக்களு மிறையுள்ள
ஞானம திலராகி நவின்மறை நெறிமாற்றித்
தீநெறி பலவாற்றிப் பனுவல்கள் சிலசெய்தார்.

உரைகள் முரணும்போது சில இடங்களிலே சரியானது எது என்பதைத் தீர்த்தல் எளிதாகும். வேதத்தின் அடிப்படையான கொள்கைகளுக்கு மாறுன கருத்துடையவைகளை விலக்குதலும், அவற்றுக்கு உடன்பாடான கருத்துக்களைக் கொள்ளுதலும் தக்கவைகளாம். கடவுள் ஒருவரேயென்பதை வேதம் தெளிவாகக் கூறியிருத்தலால் அக்கினி, வருணன், வாயு ஆகிய இவைகள் தெய்வங்களல்ல என்பது பெறப்படும். ஆதலால் இவற்றை வேவ்வேறு தெய்வங்களாகக் கூறும் உரைகள் பிழையானவைகளாம். உயிர்களுக்கிரங்குதல் வேதத்தில் விதிக்கப்படுதலால், உயிர்களைக் கொன்று உண்ணுதல் தக்கதென்று கூறும் உரை விலக்கப்படவேண்டியதாம். இனி, ஆகமங்களும் சைவர்களாகிய எமக்குப் பிரமாணமாதலால், ஆகமத்தைத் தழுவும் உரைகளைக் கொள்ளுதலும், ஆகமத்துக்கு முரணுனவற்றை விலக்குதலும் முறையானவைகளாம்.

பிரபஞ்சத்தைப்பற்றிய வாய்மைகள் பிற வாய்மைகளோடு இடைக்கிடை கலந்து வருகின்றன. உதாரணமாக இருக்கு வேதத்திலே, முதல் மண்டலத்திலே, ஐம்பதாம் சூக்தத்தில் எட்டாம் ஒன்பதாம் மந்திரங்களிலே பொருள்களைச் சுத்தி செய்வனவாகிய எழுவகைக் கதிர்கள் சூரியனுடைய ஒளியிலே

உண்டென்பதும், சூரியன் தன்னைச் சுற்றும் கோள்களைத் தாங்குகின்றதென்பதும் சொல்லப்பட்டுள்ளன.

வேதத்திலே சொல்லப்பட்ட செயல்கள் பலவகைப்பட்ட வழிபாடுகளாம். இவ்வழிபாடுகளுள் கடவுளை நெருப்பிலே வழிபடுதல் சிறந்தது.* இது யாகமெனவும் ஓமமெனவும்படும். இதனோடு உயிருள்ள பொருள்களிலே கடவுளை நினைத்து வழிபடுதலுமுண்டு. இந்த உயிர்ப் பொருள்களுக்கு யாகபசு என்றும் இந்த யாகங்களுக்கு 'பசு வேட்டெரியோம்பல்' என்றும் பெயர். இவற்றுள் ஒன்றாகிய அசுவமேத மெனப்படும் குதிரை வேள்வியிலே குதிரையையும், 608 வகையான வேறு பிராணிகளையும் யாகசாலையிலே கொண்டுவந்து, மந்திரங்கள் சொல்லிப் பூசித்தபின் அவிழ்த்துவிடப்படுகின்றன. இந்த யாகத்திலே ஒரு பிராணியும் கொல்லப்படுவதில்லை யென்பதற்கு மேல் நாட்டாரும் சான்று x கூறுகின்றனர். வேதத்துக்கு உரைசெய்தோர் சிலர் சிற்சில இடங்களிலே குதிரை கொல்லப்பட்டதென்று பிழையாக உரைசெய்தமையால், வேதத்துக்குச் சார்புநூலாகச் சுரௌத சூத்திரங்களைச் செய்தவர்கள் சில யாகங்களிலே கொலையை விதித்தனர். இவைகள் மனிதராற் செய்யப்பட்டவைகளாயினும், முகமனூற் சுருதியெனப்படுகின்றன.% இவை சுருதியெனப்படலால், அறியாதார் இவற்றை வேதமென நினைத்து, வேதத்திலே கொலை விதிக்கப்பட்டதென மயங்குவர். பிற உயிருக்குத் துன்பம் செய்யாமை *வேதத்தில் விதிக்கப்பட்டிருத்தலால் வேதம் கொலை வேள்விகளை விதியாதென்பது தெள்ளிதிற் புலப்படும்.

வேதத்தில் கூறப்படும் அறிவும் செயலும், உபநிடதங்களிலும் பிரமாணங்களிலும் விரித்துக் கூறப்படுகின்றன.

---

* இது சிவாகம முறையிலும் உள்ளது.

x இங்கே 'சான்று' என்றது வேதமந்திரங்களுக்குப் பொருள் கொள்ளும் முறைமையாம். சோல்ப்ருக் (Colebrooke) என்பவர் தமது கட்டுரைகளின் முதற்பாகத்திற் கூறுவதாவது: "இந்த (யசுர்) வேதத்திலே விதிக்கப்பட்ட அசுவமேதமும் புருஷமேதமும் கொலை வேள்விகளல்ல. முதற்கிரியையில் 609 வகையான பிராணிகள் கட்டப்படுகின்றன. இவற்றில் பழகிய பிராணிகள் இருபத்தொரு தூண்களிலும், மற்றவைகள் இத் தூண்களுக் கிடையிலும் கட்டப்படும். சில மந்திரங்கள் சொல்லியபின்பு இவைகளுக்கு ஒருவிதமான ஊறும் செய்யாமல் இவைகளை அவிழ்த்து விடுவார்கள்."

o கந்தபுராணம் - காமதகனப்படலம் 72. * இருக்கு (7, 1, 1). உயிர்களொன்றையும் கொல்லாத இல்வாழ்வானுக்கு மேம்பாட்டைக் கொடு' மேலே காட்டிய யசுர் மந்திரங்களையும் பார்க்க.

---

13-8-48,—இந்து சாதனத்திலிருந்து அநுவதித்தது.

